அன்பு மலர் 31 பாமலர் 5



# சமயசாரம்

சுவாமி சுத்தானந்த பாரதியார்

பாடியது







அன்பு நிலயம்
இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா

விலை அணா நான்கு

அன்பு மலர் 31
பாமலர் 5

ஓம் சுத்தசக்தி






# சமயசாரம்

சுவாமி சுத்தானந்த பாரதியார்
பாடியது



அன்புநிலயம்
இராமச்சந்திரபுரம்
திருச்சி ஜில்லா.

15-2

# பதிப்புரை

எங்கள் நிலயத்தின் ௩௧-ம் அன்பு மலரை (பாமலர் ஐந்து) சுத்தசன்மார்க்கக் கடவுளின் மலரடியில் வைத்து வணங்குகிறோம்.

"சமயசாரம்" என்னும் இந்நூல், உலகில் வழங்கும் எல்லாச் சமயங்கள், தத்துவங்கள், சமய சாத்திரங்கள் ஆகியவற்றின் தெளிவையும் இனிய எளிய தமிழ்ப்பாடல்களாகத் தருகிறது. இந்நூலைக் கற்றறிந்தவர், பல சமயங்களை யறிந்து, அனைத்திற்கும் அடிப்படையான உண்மையைக் காண்பார்கள்; சாதி மதவேற்றுமைகள் இல்லாமல் மாந்தரெல்லாம் ஒரு குலமாக வாழலாம் என்பதை உணர்வார்கள்.

வேதவேதாந்த ரகசியங்கள், சைவசித்தாந்த தத்துவங்கள் ஜைனம், பௌத்தம், கிறிஸ்துவம், இஸ்லாம், சீக்கியம் ஆகிய பலசமயங்களின் சாரம் அனைத்தும் இந்நூலிற் காணலாம்.

இந்நூலை எமக்கு அச்சிட்டுக் கொடுத்த அன்பர், கல்லுப்பட்டி லே. நாராயணஞ்செட்டியார் ஆவார். இவர் தமது திருவளர் செல்வன் சுப்பிரமணியன் புதுமை நன்னாளை இந்நூலால் சிறப்பித்தார். இவர் தமிழன்பும், தயாளகுணமும், எமது நிலய வளர்ச்சியில் கருத்தும் கவனமும் உடையவர். இவர் செய்த உபகாரத்திற்கு நன்றி பாராட்டுகிறோம். இவரும் இவர்தம் மகனும் ஆயுளும், அருளும், செல்வமும் ஓங்கி நீடூழி வாழ்க!

அடிகள் தமிழருக்குச் சேர்த்துவைத்த பாமலர்கள் அனைத்தையும் தொடர்பாக வெளியிட முயன்று வருகிறோம். இறைவனருளும் அன்பர் துணையும் எமது முயற்சியை ஊக்கி நடத்தி வெற்றியருள்க!

ஓம் சுத்த சக்தி

விக்கிரம ௵<br>ஆவணி மீ ௯-ம் உ<br>புதன்கிழமை

அன்பு நிலயத்தார்.

# சமயசாரம்

## க. கீதை யமுதம்

வாழ்க்கையாகிய குருநிலம்; அதில் நலந்தீதாகிய இருவிகாரங்கள் பாண்டவ கௌரவராகப் படை திரண்டு நிற்கின்றன. அனுமக் கொடி பறக்கும் அர்ஜுனன் தேரை, சர்வசாட்சி சேதனனாகிய கண்ணபரமாத்மா நடத்துகிறான். பாஞ்ச ஜன்யம் முழங்கியது. ஆர்த்தன முரசம். இந்த இரண களத்தில் எதிர் நிற்கும் பகைவரைக் கண்டு "என் உறவினர், பெரியோர், குருமார் ஆகிய இவரையோ கொல்வது....ஆ மகாபாவம்!" என்று பாசாத்மாவாகிய விஜயன் கலங்கி வில்லைத் துறந்து, கண்ணனைச் சரண்புகுந்து நிற்கிறான். "சோர்வை விடு. எழுந்து போர்புரி. நான் பகைவரை முன்பே கொன்றேன். பார் எனது விசுவரூபத்தை. நானே உலகம், உயிர்க்குலம். எனது எண்ணம் நிறைவேறி உலகில் அதர்மம் ஒழிந்து அறந்தழைக்கவே இப்போரை ஆக்கினேன். எனது நிமித்தகாரணனாயிருந்து, பலத்திற் பற்றில்லாமல், எனக்கே வேள்வியாய் உன் கடனைச் செய். என்னையே பணி, அறி, அன்புசெய். என்னன்பர் கேடுறார். நான் உன்னைப் புனிதனாக்கிப் பேரின்பமளிக்கிறேன்...." என்று பரமாத்மக் கண்ணன் ஜீவாத்ம விஜயனைத் தேற்றி, குணதொந்தப் பகைவரைப் பொருது வெல்லத் தூண்டுகிறான். இதனின்றெழுந்ததே கீதையமுதம்.

கீதை, இந்து தருமத்தின் பைபிள்; சர்வமத சமரஸ வேதம், உலகமெல்லாம் கீதையைப் போற்று

கிறது. எல்லா உபநிஷத்துக்களினின்றும் கறந்தெடுத்த இக்கீதையமுதம், மனிதஜாதிக்கு அமரத்தன்மை யளிக்க வல்லது. இன்றும், அன்றும், என்றும் நமது பாரதஜாதிக்கு ஆத்ம சக்தியளித்து, வாழ்க்கைப்போரில் வெற்றியுறச் செய்வது கீதோபதேசமேயாம். அனன்ய சரணாகதியே கீதாரகசியம். "என்னைச் சரண்புகு, என்னில் வசி, யோகயுக்தனாக வாழ்ந்து என்மய மாவாய்" என்கிறான் கண்ணன். இங்கே 'என், யான்' என்பது யார்? "நான் எல்லா உயிர்களின் உள்ளத்தும் விளங்கும் ஆத்மா. ஆத்ம ஞானத்தினாலேயே தன்னை உயர்த்துக" என்கிறான் கண்ணன். பரமாத்ம நிலையினின்றே கண்ணன் பேசுகிறான். ஒவ்வொருவரும் இதய பரமாத்மனாகிய கண்ணனை அன்பால், அறிவால், ஒப்புரவால், வினைவேள்வியால், தியானமோன சாதனங்களால் கலந்து வாழவேண்டும். ஒவ்வொருவருள்ளும் கண்ணனே 'தான்' என்னும் தத்துவமாக விளங்குகிறான். தன்னிற் கலந்து, தானாகி, தானேயாக உலகைக் காண்பதே உபநிஷத் ரகசியம். அதுவே அனன்ய பாவனை யாகிய கீதாரகசியமும் ஆகும்.

இந்த மகத்தான அத்யாத்ம வேதம் 18 அத்தியாயங்களாக உபதேசிக்கப் பெற்றது. கர்மம், பக்தி, ஞானம் ஆகிய மூன்று யோகங்களையும் சேர்ந்து பயில இந்நூல் வற்புறுத்துகிறது. ஒவ்வொருவரும் கீதையின் உபதேச சாரத்தைத் தெளிவாய் அறிக!

## வீரன் சோர்வு

சங்கொ லித்தனன் சக்கரக் கண்ணன்...
தாவிச் சேனை சமர்செய்யும் வேளை....
'அங்கு நிற்பவர் என்கிளை ஆசார்...
அவரைக் கொன்றர சாள விரும்பேன்...'
இங்குலகைத் துறந் திரந் துண்பேன்...'
என்று வில்லையெறிந்து தளர்ந்த,
பொங்கு வீர விஜயனைத் தேற்றிப்
புன்னகை செய்து கண்ணன் புகல்வான். க

## கண்ணன் உபதேசம்

சாடி வெஞ்சர மாரி பொழியுந்
தருமப் போரிடை யேதளர் வெய்திப்
பேடி போலப் பிதற்றிடு வாயோ....?
பெரிய வீரப் பெருமைக் கழகோ?
கூடி நிற்குங் கொடியரைக் கொன்றே...
குவலயத்திற் செங்கோலை நிறுத்தாய்....
வாடி நிற்கும் அறமகள் வாழும்
வன்பணி யிதென் அன்பு விஜயா! உ

இதயத் தேரில் இருந்துரைக் கின்றேன்:
எங்கு முள்ள பரம்பொருள் யானே...
மதி மயங்கா தெழுந்துநில் வீரா...!
வாழ்வின் முக்குணப் போரினுக் கஞ்சேல்....
சதிசெய் ஆசை அகந்தையின் கட்டம்
சாயத் தூய சுதந்தரம் வாய்க்கும்
புதிய விண்ணர சோங்கிப் பொலியப்...
போர்செய் சிங்கத்தைப் போல விஜயா! ங

## அழிவறும் ஆன்மா.

பாசத்தால் என் பணி மறுக் காதே.
பாய்ந்து போர்செய் பகைவர் நடுங்க!
வீசு வெங்கணை! வெற்றி யுனக்கே!
வீரர் தம்வினை செய்திடக் கூசார்.
நாச மாவது நாறுடற் சட்டை;
நன்று வாழ்வது பொன்றறும் ஆன்மா.
மாசி லாதது; வாளுக்குந் தீக்கும்
வணங்கி டாதது வாழ்விற் குயிராம். ௪

## உண்மைப் பொருள்

உண்மை யாவதும், உள்ள பொருளும்,
உறுதி யாவதும், ஒன்று பலவாய்
மண்ணுடல் கொண்டு வாழ்வது மிங்கே
மன்னு மான்மாவென் றேயறி யன்பா.
எண்ணி லாத பிறப்பிறப் பெல்லாம்,
இன்ப துன்ப விகற்பங்க ளெல்லாம்
கண்ணிற் காணுமிக் காயத்திற் கேயாம்.
கலங்கி டாரிதைக் கண்ட புலவர். ௫

## சமத்துவம்

வெற்றி தோல்வி, விருப்பு வெறுப்பு,
வெம்மை தண்மை விகற்பங்க ளின்றிப்
பற்று நீங்கிப் பலன்விழை வின்றிப்
பழுதறப் பணி செய்தலே யோகம்.
முற்றும் உள்ளச் சமத்துவம் யோகம்...
மூளையைக் கலக்கும் புல னைந்தைச்
செற்றுச் சுற்று மனத்தைச் செயித்தே
சேம நல்லறஞ் செய்வர் புலவர்... ௬

## நிலைத்த ஞானி

ஆசை யச்சம் அகந்தையைப் போக்கி,
ஆமை போற்புலன் ஐந்தும் அடக்கிப்
பாச மோகப் படர்சினம் வீட்டிப்
பகைநட் பின்றிப் பகலிர வின்றி,
மாசி லாத மனத்தெளி வுற்ருேன்,
மாறி லாதமர் மாகடல் போன்ருேன்.
பேச ரிய நிலைபெறு ஞானி...
பெரிய மோனி, பிறப்பிறப் பில்லான். எ

## வினைசெய் ஞானி

இந்த ஞானங்கை வந்த புலவன்,
ஏது செய்யினுந் தீதுற மாட்டான்
சந்த தமுஞ் சமநிலை நின்றே
சத்கரு மஞ்செய் வித்தக மேலோன்.
பந்த மற்ற சுதந்தர ளுகப்
பாரி லேயவன் சீர்வினை செய்வான்.
அந்த மாதி யிலாதுள் ளமரும்
ஆன்ம சத்துவம் யானென் றறிவான். அ

## கரும யக்ஞம்

கருமம் விட்டதுங் கட்டற மாட்டாய்;
கரும மின்றிக் கணமுமொண் ணுதாம்.
பெரு வினைக்களன் இப்பிர பஞ்சம்
பிரம சக்கர மாம் பெரு வாழ்வே
விரிந்த ஞான வியன்சுட ரோங்கும்,
வேள்வி யாக வினைகளைச் செய்வாய்;
பரம னுக்குயர் வேள்வியில் லாத
பாழும் வாழ்வது பாவியர் வாழ்வாம். கூ

## ஞான வேள்வி

விரதம் கல்வி, தவம், உப சாந்தம்,
விந்த டக்கம், வைராக்கிய வீரம்
பரம் பொருளைப் பணிவுடன் போற்றல்,
பாயு மூச்சை யடக்கி நிறுத்தல்,
பிரமத் தீயில் அனைத்தும் வழங்கிப்
பிரம மாகுஞ் சகஜ சமாதி,
அரிய வேள்விக ளாகும்: பயின்றோர்
அறிவொளி பெற் றமரர்க ளாவார். கய

## பிரம யக்ஞம்

வேக மான புலனை யடக்கி,
வேறு செய்யும் அவித்தையை நூறி
சோக மோகத் துயரைத் துடைத்தே,
தொந்த மற்ற பதம்பெறு ஞானி,
யோக யுக்தன், விசுத்தன், விமுக்தன்.
உள்ளத் துள்ளும், உலகிலும், எங்கும்,
ஏக மான பிரம வொளிக்கே
ஈந்து தன்னை அதுமய மாவான். கக

## பணி செய்

தீனர குறுத்தும் சினங் காமம்,
சிறுமை லோபப் பகைகளைச் செற்றே,
யானென தெனும் ஆணவ மின்றி,
யாதுஞ் செய்வ தியற்கையென் றெண்ணி,
வானு லகம் வளர் நலம் போற்றி,
வரும் பலாபல னையெனக் கின்றே,
நானிஞ் ஞாலம் வகிப்பதை யெண்ணி
நன்றெ றமுந்துன் கடனைச்செய் நண்பா. கஉ

## அவதாரம்

நலியத் தீயன நல்லறம் வாழ,
  † நால் வகைத் தொழிலும் நனி யோங்க,
உலகந் தெய்வ நிலைக்கெழுந் துய்ய,
  யோகத் தாலிங் கவதரிக் கின்றேன்.
அளவி லாவிளை யாடல் புரிந்தும்,
  அமைதி விண்ணில் அசைவற் றமர்வேன்.
இலகு ஞானிகள் எத்தொழில் செய்தும்,
  இதயத் தென்னுடன் கூடி யிருப்பார். கங

## அத்யாத்ம ஞானம்

தன்னைத் தன்னால் உயர்த்தித் தழைப்பாய்
  தன்னைத் தாழ்த்திட லேதனக் கின்னல்
தன்னைத் தன்வச மாக்கி யமர்ந்தே,
  சலன மற்ற விளக்கென் றொளிர்வாய்,
தன்னிக ரென யாவையுங் காண்பாய்,
  சங்கற்ப விகற் பங்க ளொழிப்பாய்;
தன்னைப் பெற்றவன் பின்னெதும் வேண்டான்;
  தானே யின்பந் தனக்கென் றறிவாய். கச

---

† நால்வகைத் தொழில்=குண கர்ம விபாகம்: (1) அந்தணர்க்குரிய அறிவுத் தொழில்; (2) அறங்காக்கும் வீரத் தொழில், (3) திருவோங்கும் பயிர், பசுக்காத்தல், வாணிபம் கைத்தொழில், (4) பொது நலமான தொண்டுகள்.

## யோகம்

ஆசனத்தி லமைவுற வூன்றி,
அமைதி யான தனிமையி லென்னை
மாசி லாத மனத்தி லிருத்தி,
மறு விலாத தியானம் புரிவாய்.
ஆசை பற்றி யலையும் புலனை,
அங்கங்கே யிழுத் துள்ளத் தடக்காய்.
பேசரிய சுகப் பொரு ளாவாய்
பேரின்பத் தவ யோக மிதுவே. கரு

## யோக யுக்தன்

யோக யுக்தன் உலகினுக் கஞ்சான் ;
உள்ள டங்கி யுவந்தொளி கூடி
ஏக மாகிய ப்ரம்மநிர் வாணன்,
எங்குந் தன்னை யினிதுறக் காண்பான்.
தாக மோகந் தவிர்த்த சமர்த்தன்,
சமநிலை யினிற் சாந்த மடைந்தோன்,
யாக முண்ணும் இறைவனைத் தேர்ந்தோன்
ஆயிரஞ் செய்தும் பற்றற நிற்பான். கசா

## எனக்கினியவன்

என்னின் அன்னியம் எங்கிலும் இல்லை.
என்னிலே தொடுப் புற்றன வெல்லாம்.
என்னி யற்கை *யிரண்டும் உலகாய்
இன் னுயிர்க்குல மானதை யெண்ணாய்.
என்னை யன்புசெய் யும்அறி வோனே
எனக் கினியவ னுவனெப் போதும்.
என்னி லேயவ னின்புற் றிருப்பான்.
என்றும் யானவ னுள்ளத் திருப்பேன். கஎ

---

* இயற்கை இரண்டு: பாரப்பிரகிருதி, அபரப்பிரகிருதி

## உய்வகை

எவ்வ கையினர் என்னைக் குறித்தே
எவ்வகை வழி பாடுகள் செய்தும்,
அவ்வ கையினர்க் கவ்வழி தோன்றி,
அன்பை யேற்றருள் செய்பவன் யானே.
செவ்வ கையினிற் சித்தம் வகித்தென்
சேவ டிப்பணி செய்பவர் மேலோர்.
உய்வகை, உணர்ந் தென்னை யறிவால்
ஓங்கு மன்புப் பணிசெய்த லொன்றே. க௮

## இறுதி யெண்ணம்

எண்ணம் எவ்வகை யவ்வகை வாழ்வாம்.
இறுதி யெண்ணம் இனிவரும் வாழ்வாம்.
எண்ணரிய பரஞ்சுட ரென்றே
எண்ணு மன்பன் எனையடைந் துய்வான்.
உண்மை யுன்னத நன்னிலை யெய்வான்
உன்னி யென்னை யுயிர்விடும் யோகி.
புண்ணியம் பிறி தில்லையெப் போதும்,
பொருந்தி யோகத் திருந்திடு வீரா... க௯

## என்னில் அடக்கம்

வானிலே யடங்கும் வளி போலே
வையம் வாழுயிர் என்னில் அடங்கும்.
யானென் மாயையால் ஆக்கி யளிப்பேன்.
யானி லாதில்லை யாங்கணு மெஃதும்.
ஈனப் பாவியும் உய்வனென் அன்பால்.
எனை நினைந் தெனக்கே யனைத் தும்செய்.
ஆணை ! அன்பன் அழிவுற மாட்டான்,
அன்ப னின்பொறுப் பென்[illegible] பாகும். ௨௰



## எல்லாம் யானே

முதலிடை கடை முற்றிலும் யானே.
மூன்று கால நிகழ்ச்சியும் யானே.
ஸதஸத் தாகிடுந் தன்மைகள் யானே
ஸர்வ பூத மஹேசனும் யானே.
இதயந் தோறுட் இருப்பவன் யானே
இயற்கை யான பொருள்களும் யானே.
அதிசயச் சிறப் பென்சிறப் பாகும்.
அகில மெல்லாமென் அம்ஸமொன் றேயாம். உக

## விசுவரூப தரிசனம்

### விஜயன்

யான் றெளிந் தறிந்தேன் அச்ச மில்லேன்
ஆண்டவா வுன் அருள தாயின்,
வான்புவி நிறைந் தோங்கிப் பெருகும்
வடிவைக் காட்டுவாய் வாய்மன மெட்டாய்!

### கண்ணன்

ஊன்விழிக் கரி தாகுமென் உண்மை—
உலக ளாவும் அகண்ட சொரூபம்.
ஞானக் கண்ணைத் திறக்கின்றேன் பாராய்
ஞால மாகுமென் கோலத்தை நண்பா! உஉ

## விஜயன்

கண்கொளா வியன் காட்சி யடாடா!
கதிர்க ளாயிரங் காந்திடுஞ் சோதி!
விண்ணு மண்ணும் விரிந்தொளிர் உன்னுள்
விளக்குப் பூச்சிபோல் வீழ்ந்தனர் வெய்யர்!
எண்கொ ளாத்தலை, ஆயுதக் கைகள்!
இகற் படையை நொறுக்கிடும் பற்கள்!
புண்ணியர் தொழு கின்றனர் உன்னை!
பூமி யெங்கும் பொலிகுதுன் சக்தி! உரு

## கண்டேன் கண்டேன்!

கண்டேன் கண்டேன் காசினி யெல்லாம்.
அண்டமும் அப்பா லானவை யெல்லாம்.
கண்டேன் உன்னுட் கண்ண நின் பெருமை
விண்டேன், வியந்தேன் வேதப் பொருளே....
மகுடமும் தண்டும் வலயமுந் தாங்கினை....
தேசோ ராசியாய்த் திகழ்ந்தனை யெங்கும்.
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் நீயே...
அளவிடற் கரியாய் அழிவிலாப் பொருளே.
உலகுயிர்க் கெல்லாம் உறையு ளாவாய்.
ஆதியு நடுவும் அந்தமும் ஆனாய்,
கதிர்மதிக் கண்ணு, கனலெறி முகத்தாய்
எட்டுத் திக்கும் எரியுதுன் கனலே
சித்தரும் இயக்கரும் தேவரும், முனிவரும்,
போற்றிசெய் துன்னைப் பூங்கழல் பணிவார்.
ஆறுகள் கடலைச் சேருவ தொப்ப
உன்னுட் புகுந்தனர் உலகின ரெல்லாம்.
வணக்கம், வணக்கம், வான்புவி கடந்தோய்!
ஆஹா...அரக்கரை வேகமாய்த் தின்றாய்....
உக்கிர வடிவே உரை நீ யாரென....
உன்முன் அஞ்சினேன் ஓங்குயர் பரமா! உச

## கண்ணன்

யானே காலன்; அழிக்கப் புகுந்தேன் !
உன்னைத் தவிர உண்பேன் அனைத்தும்.
முன்பே இவரை முடியக் கொன்றேன்...
நிமித்த காரண மாகவே நின்று...
போர்புரி யன்பா...புகழெலாம் உனக்கே! உரு

## விஜயன்

சரணம் சரணம் சத்குரு மஹாத்மனே!
ஆதிப் பொருளே....அனந்த குணனே,
உலகிற் கெல்லாம் உயர்பெறு நிலையமே.
அறிவே, அறிஞர் அறியும் பொருளே,
ஆயிரந் தடவை அடியேன் வணக்கம்.
முன்புறம் வணக்கம், பின்புறம் வணக்கம்.
எல்லாப் புறமும் இறைவனே வணக்கம்.
மனிதத் தோழன் என்றுனை மதித்தேன்.
அன்பி னாலும் அசட்டை யாலும்
அன்பா கண்ணா யாதவா என்றேன்.
உண்ணும் போதும், உறங்கும் போதும்,
ஆடும் போதும், அமரும் போதும்,
நண்பர் முன்பும் நாயினேன் உன்னை
விளையாட் டாக வினய மின்றிப்
பேசினேன்; என்பெரும் பிழைகளைப் பொறுப்பாய்.
மன்னித் திடுவாய் மாதவா போற்றி!
சராசர வுலகத் தந்தை நீயே....
ஒப்புயர் வற்ற உண்மை நீயே—
நீயே வையகம்; நீயே வானகம்.
தந்தை தனயனைப் பொறுப்பது போலே
நண்பனை நண்பன் பொறுப்பது போலே
காதலன் காந்தையைப் பொறுப்பது போலே
தேவா பொறுத்தருள் சிறியேன் பிழையை.... உசு

(வேறு)

ஆதி யப்ப வொப்பற்ற பரமா
அடைக்கலம் என் பிழைபொறுத் தாளாய்....
போதும் இந்த உருத்திரக் காட்சி
பொறுக்கிலேன்...இயல் பாகப் பொலிவாய்....

**கண்ண பரமாத்மா**

(விசுவரூபத்தை மறைத்து)

வேதந் தானந் தவம் விளம் பாதாம்.
வீர பக்தி விரதத்தி னாலே....
யாதினும் பெரும் அற்புதங் கண்டாய்.
யானெ லாமென் றறிந்தனே யன்பா! ௨௭

## அருமை அன்பன்

கருத ரிய கடவுளைக் கண்டோன்,
காணு யிர்கள் அதுமய மென்போன்.
இருமை, அச்சம், பகைசெருக் கற்றோன்,
இன்ன லில்லான், எவர்க்கும் இனியன்,
கருணை நேயன் சமநிலைச் சாந்தன்,
கலங்கிடா மனத் தூயன், விதேயன்,
அரு ளமைதி யறிவொளிர் யோகி,
அருமை யன்பன் அவனெனக் காவான். ௨௮

## புருஷன், பிரகிருதி

*தத்துவம் இரு பத்தொடு நான்கும்
சார்ந்த தாகும் இயற்கைச் சடலம்.
சுத்த சாட்சி புருஷ னதனுள்;
சுதந்திரன் அறியும் அறி வானோன்.
சித்த மூன்றுந் தியானத்தி னாலும்,
செய்ய ஞான விசாரத்தி னாலும்,
பத்தி யாலும், அருட்பணி யாலும்
பார்த்தவர் பர மானந்த மாவார். ௨௯

---

* 24 தத்துவம். பூதங்கள் 5, தன்மாத்திரை 5, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, அந்தக்கரணம் 4=24,

## ஞானம்

தன்னுறுதி யடக்கம், பொறுமை,
சாது சங்கம், பெரியவர் சேவை,
இன்னுயிர்க் கருணை மனத் தூய்மை,
இந்த்ரிய ஜயம், சித்தவை ராக்யம்,
என்ன தென்னிறு மாப்புக ளின்மை;
இதய சாந்தி, சமநிலை யோகம்
உன்னதப் பொருளை யுணர் விக்கும்,
உண்மை ஞான வொளியினை நல்கும். ௲௰

## பிரமநிலை

சுகம், அவா, இருள் ஆணவத் தாலே
சூழு முக்குண மாயையைத் தாண்டி,
பகைநட் பற்ற சமப்பத மெய்தி,
பற்றி லாது பதைப்பதில் லாது,
சகத்தி னுடலைச் சாட்சியாய்க் காண்போன்,
சந்தத மெனைச் சிந்தையில் வைப்போன்,
அகங்கி ளம்பா தடங்கிய சாந்தன்,
அவன் பிரம நிலைபெறு யோகி. ௲௧

## வாழ்க்கை

ஆதி ப்ரம்மனில் ஊன்றி விரியும்
அரசைப் போன்றதிம் முக்குண வாழ்க்கை.
பேத புத்தி அகந்தையின் பற்றால்
பெருகுந் துன்பமிப் பேதுறு வாழ்வில்.
தீதி ழைத்திடும் ஆசையைச் செற்றார்
செருக்கிலார் சொந்த பந்தமில் லாதார்,
சோதி நாதனைப் பெற்றுச் சுகிப்பார்...
சுவர்க்கம் அன்னவர் வாழ்விற் றுலங்கும். ௲௨

## புருஷோத்தமன்

வினை முதல்வன் விளம்பிடில் யானே.
வினை பயிரை வளர்ப்பவன் யானே.
தினக ரனிற் றிகழொளி யானே.
தின்றதைச் செரி யக்கினி யானே.
அனைத்தி னுள்ளமுங் கோயில்கொண் டுள்ளேன்.
அற்பு தங்களென் அம்ஸமொன் றேயாம்.
எனைப் புருஷ ப்ரக்ருதிக்கப் பாலாம்
ஈடிலாப் புரு ஷோத்தம னென்பாய்! ௩௩

## தேவாசுர சம்பத்து

தீரம், உட்புறத் தூய்மை, அஹிம்ஸை,
திண்மை, உண்மை யறிவி னுறுதி,
சீர்மை, நேர்மை, பொறுமை, அமைதி
தியாகம், தெய்வத்தன் மைக ளிவையாம்.
கூரம், பொய்யிறு மாப்பு, பகைமை
கொடுமை, வெங்கொலை நாத்திகத் தீது,
கார் நரகிற் புகுத்தும் பொறுமை,
காமம் ஆசை அசுரக் குணமாம். ௩௪

## சிரத்தை, தவம்

சிரத்தை யெப்படி யப்படி மாந்தர்;
சிரத்தை முக்குணச் சீர்மை யுடைத்தாம்.
உரை, புணவு, நடப்பு, நினைப்பு,
முற்றுந் தூய வொழுங்கொ டமைக.
பிரம சாரியம் சற்குரு சேவை,
பேச்சி லுண்மை நற் கல்வி, யறிவு
பரம னன்பு, மவுனம் அடக்கம்
பழுதி லாத்தவ மாகும் இவையே. ௩௫

## ஓம் தத் ஸத்

சொல்வ தெல்லாம் சுருதியும் ஆகும்,
தூய நல்வினை வேள்வி தலங்கும்.
தொல்லுல கெல்லாந் தன்மயந் தோன்றும்.
சுத்த முத்தி துளிர்த்திடும் வாழ்வில்.
எல்லை யற்ற சமரஸா னந்தம்
இன்னு யிர்களுக் கொற்றுமை யீயும்,
அல்லல் போம் பிரமநிலை யாகும்,
அறிக ஓம்தத்ஸத் ஓமெனும் உண்மை. ௩௬

## மறுவறு மின்பம்

வினைப்பற் றற்று, விழை மனமற்று,
விரதம், வேள்வி, தியாகம் விரும்பி,
எனதி யானென் செருக்கை விலக்கி,
இறைவனை யுணர்ந் தெங்கு மெதிலும்,
இனிய நஞ்சாம் புலச்சுக மின்றி,
இன்ப மாத்ம சுகமென் றறிந்தே,
மன மயக்கினை மாசற வென்றே
வாழ்வை யோக மெனச்செய்க மாந்தர். ௩௭

## தன்னறம்

சம தமந் தவங் காத்திடும் பார்ப்பார்,
சமர்வென் றானுஞ் சவுரிய வீரர்,
அமைவுறப் பணி செய்திடும் அன்பர்,
ஆ, பயிர், பொருள் ஆக்கும் வணிகர்
தமக் குரிய தருமத்தைப் பேணிச்
சமூக சேவைசெய் யாவரும் ஒன்றே.
சுமை யுறும் அகங் காரமில் லாமற்
சுத்தனை யெண்ணித் தொண்டுசெய் வீரா! ௩௮

## பரம ஹம்ஸன்

(வேறு)

முத்தூய்மை யுறுதிபெறக் காம மாதி
முக்குணத்தொடர் கங்களெலா முடிய வீட்டிப்
புத்தியினைத் தெளிவாக்கிப் புலனை வென்று,
போதவடி வாந்தன்னுட் பொருந்தி நிற்கும்
சித்தனே பரமஹம்ஸன் சிற்சு காத்மன்,
சிந்தையிலான், பரமாத்ம நிலையிற் சேர்வான்.
சுத்தனவன் எதுசெயினுந் தோஷ மில்லான்,
சுற்றுலகின் விளையாட்டிற் பற்றொன் றில்லான்.

## சரண்புகுவாய்

இன்னுயிரின் இதயத்தில் இறைவன் உள்ளான்.
எல்லாந்தன் மாயையினிற் சுழலச் செய்வான்.
அன்னவனுக் காளாவாய்; அருள்பா லிப்பான்.
அச்சமிலை, இடரில்லை, அழிவு மில்லை...
என்மனத்தன், என்னன்பன், எனைப்பூ சிப்போன்,
என்மயனு வான்; யானே அவனுள் வாழ்வேன்.
சொன்மனத்தைக் கடந்தசுகப் பொருளாம் என்னைத்
தூயசரண் புகுந்தின்பந் துலங்கு வாயே! சுய

## விஜயன்

(வேறு)

மோகம் விடுமுக் குணதொந்த மறு.
வேகப் புலனைந் தையும்வென் றுசுகா
யோகத் திரு....வென்றனை யுன்னுமொரும்
ஏகப் பொருளே எனதாண் டவனே... சுக



விடுவாய் அறம்யா வையும்வேண் டியெனை
நடுவாய், யடைவாய், நலியும் கலியே....
அடுவாய் பகையென் றனைஅச் சுதனே,
விடுவேன் கணையுன் செயல்வென் றிடவே.... சஉ

பண்ணும் பணியும், பயனும், பரிசும்,
எண்ணும் நினைவும் உனதே யிறைவா....
விண்ணும் புவியும் விளையாடு கிறாய்.
கண்ணா கருணைக் கடலே சரணம்! சரு

## கீதை

வேதப் பொருளே விண்ணின் பழுதே....
சோதிச் சுடரே...சுகநற் கனியே....
ஆதிப் பொருளை யருளும் அறிவே...
கீதைக் குயிலே கிளநள் ளிசையே! சசு

(கீதாமிருதம் முற்றிற்று)

## உ. சிவசிந்தனை

[எல்லோரும் இன்பம் வேண்டுகின்றனர். மாசற்ற முற்றின்பமே சிவம். "சிவம், சிவம்" என்று எப்போதும் நினைத்தால் உள்ளும் புறமும் பேரின்பம் பொங்கும். காலைமாலை சிவசிந்தனை யில் மனம் ஈடுபட்டிருக்க இந்தப் பாடல் ஒரு பயிற்சி யளிக்கும். சிவாத்துவிதப் பொருள் இதில் அடங்கும். இதை ஆரபியிற் பாடுக.]

சிவசிவ, சிவவெனச் சிந்தைசெய் மனமே ;
சிவமயங் காணுய் சீவரு ளெல்லாம்.
தோன்றிய உலகெலாந் தோற்றிய முதல்வன்,
ஈன்றளித் தருளால், இன்னுயிர்க் குயிராய்
அணுவினு மணுவா யவனியிற் பெரிதாய் ௫

குணு * முத லிமையவர் குழுவரை யெங்கும்
அவனவ ளவையெனு மனைத்துந் தானுய்
எவற்றிலுந் தாக்கற் றிருந்தவா றிருக்கும்,
தற்பரம் பொருளைத் தரணியாய் விரிந்த
சிற்பரஞ் சுடரைச் சிந்தைசெய் மனமே! ௰

அவனரு ளின்றி யாதுமிங் கில்லை ;
அவன்வினை யாட்டே யகிலவாழ் வெல்லாம் ;
"இதயமா மன்றில் இருக்கிறேன் காண்" எனப்
பொதுநடம் புரியும் புண்ணியன் அவனே !
அன்பைப் பெருக்கி ஆணவம் சுருக்கி, ௧௫

---

* புழு

இன்பக் கடவுளோ டிரண்டறக் கலத்தலே
வாழ்வின் பயனென வகுத்தனர் மேலோர்.
சூழ்வினைக் கட்டறச் சுதந்தரம் பெறவும்,
கவலை நெஞ்சக் கல்லைக் கரைக்கவும்,
அவமய மாய மனத்திரை யடங்கிப்

படிகம் போன்றுட் பரமனைக் காட்டவும்,
பிடிவிடா தவனடி பேணுவாய் மனமே!
திருவடி மலரிற் செழுந்தே னுண்ணாய்;
மருட்குல நீங்குங் கருக்கணக் கொழியும்.
காண்விழிக் கவனே கதிரென் றறிவாய்!

பூணுடற் கவனைப் பூதமென் றுணர்வாய்!
உயிருக் கவனே யுயிர்ப்பெனக் காணாய்!
வயிற்றிற் சீரணி வன்னியு மவனே!
ஓடு நாடியி லுணர்ச்சியு மவனே!
ஆடுஞ் சீவரை ஆட்டுவோ னவனே

அருவே யானோன், அருளுருக் கொண்டு,
குருவே யாகவும், குணங்குறி யின்றியும்,
முன்னே வந்தும், பின்னே மறைந்தும்,
தன்னையே கூவுந் தமியரைக் காப்பான்,
எவ்வடி வினிலே யெங்கெவர் வழுத்தினும்

அவ்வடி வினிலே யாங்கவர்க் கருள்வான்!
முறையிடு மனமே, முறையிடு மனமே,
முறையிட் டவனுள் உறைவாய் மனமே!
“ இறைவா போற்றி, யென்னவா போற்றி,
மறைமுடி காணா வாய்மையே போற்றி!

உன்னை யன்றிப் பின்னெது மில்லை ;
மன்னனு நீயே ; மக்களு நீயே !
உள்ளு நீயே ; யுலகெலா நீயே !
கள்ளார் மலரின் கவின்மண நீயே !
அப்பனு மன்னையு மொப்பறு நட்பும்
முப்பெரு முலக முற்றிலு நீயே !
பெரிதிற் பெரிய பெரியனு நீயே !
சிறிதிற் சிறிய சிறியனே னுன்றன்
பதமலால் வேறு கதியிலேன் ஏழை....
துதித்துத் தொண்டுசெய் மதியெனக் கருளாய்!
பணியும் பத்தியும் பனுவலும் அருளால்
அணிந்தசோற் கோவின் அன்பெனக் கீவாய் !
பந்தத் தளையறப் பரிந்துமுன் வந்து,
சுந்தரத் தோழனைத் தொண்டுகொண் டதுபோல்,
வினைவழி வருந்தும் எனைத்தடுத் தாண்டினை
நினைவழி செலுத்தி நின்னடி சேர்ப்பாய் !
*பாலறு வாயர் பைந்தமிழ்ப் பண்ணால்,
† ஆலவாய் தன்னில் அற்புதம் புரிந்து,
சமயமுந் தமிழுந் தழைத்திடச் செய்தாய் !
இமயமீ தேறி யிளைத்தவா கீசர்
கைலையை யாற்றிற் கண்டிடச் செய்து,
வையக மெல்லாந் தையலோ டமர்ந்த
வாய்மை காட்டினை ; வரதநான் காணத்
தூய்மையும் உன்னருட் சுடருமெற் கருளாய்!
குருந்தின் கீழே குருவா யிருந்து,

---

*பாலறுவாயர்=ஞானசம்பந்தர் † மதுரை

மருந்தென வுதவியோர் மந்திர மணியை,
வாதவூ ரடிகளை மணிவாக் கமுதால்
ஓதியுன் புகழை யுய்திடச் செய்தாய்'
அன்பனுக் கேபிரம் படியும் வாங்கினாய்!
அன்ப னருந்தமிழ் அமுதென வுவந்து,

திருச்சிற் றம்பலம் விருத்தனாய் வந்து,
திருவா சகத்தைத் தீட்டி யருளினை!
அப்பனே யுன்ற னற்புத மறிந்தேன்.
ஒப்பறு முன்கழ லொன்றே பற்றி,
சாற்றுவ துன்னையென் சரியை கிரியை;

போற்றுவ துன்னையென் பொய்யறு யோகம்;
அனைத்துநீ யென்பதென் அளப்பறு ஞானம்!
தினைத்துணை யேனுன் சேவடிக் காளாய்
உய்யக் கருதி யுருகிநிற் கின்றேன்!
பையக் கொண்டென் பாசம் போக்கி,

இருவினைக் கட்டற இருளழுக் ககற்றி,
வருவினை மாற்றி, வரவினி யின்றியுன்
அருட்கடல் விரிவில் ஆறெனச் சேர்த்து,
மருட்பிறப் பின்றியுன் மாசறுஞ் சுடரின்
காந்தியிற் கரைத்துக் கற்பூ ரம்போல்,

ஈந்துனை யென்னை யிழுத்துனுட் கலப்பாய்!
அகமெலா மடங்கிச் சகமுதி யாத,
சுகநிலை தருவாய் தூயனே போற்றி!
ஆலடி மௌனத் தாழ்ந்தசற் குருவே.
காலடி நின்றுன் கருணையை வேண்டினேன்!

அரனே, திருச்சிற் றம்பலக் கூத்தா,
பரனே கங்கா தரனே போற்றி!
வஞ்சக நமனை அஞ்சிட வுதைத்தாய்
நஞ்சினை யமுதென நயந்துவா னவரைக்
காத்தனை; நெஞ்சக் கவலை தீர்ப்பாய்! கூ௫

பூத்த மலரின் புன்னகை நீயே;
வான்வலைத் தனையும் வையக நீயே;
ஊனுயிர்க் கோயிலுள் ஞான நடஞ்செய்
பொதுநிலைப் பொருளே, போற்றி, போற்றி!
ஆர்கலி முழங்கும் அரசே போற்றி! ௧௰

பேர்வடி வடங்காப் பெருமையே போற்றி!
இயற்கையி னுள்ளே இலங்கிடும் அழகா!
சயசய போற்றி, சயசய போற்றி,
இன்பப் பிழம்பே, யின்னறி வொளியே,
அன்புவா னமுதே யடியார்க் கெளியா! ௧௰௫

பவவினை தீர்க்கும் பசுபதி போற்றி!
சிவசிவ சிவவெனச் சிந்தைசெய் மனமே!

ஓம் சிவம்.



## ௩. வேதமுரசு

### பல்லவி

ஒற்றுமை ஒற்றுமை யென்றே கொட்டு முரசே
'உண்மை அது ப்ரம்மம்' என்றே கொட்டு
முரசே....
அற்றதிருள் அச்ச மென்றே கொட்டு முரசே—
சச்சித்
ஆனந்தம் ஆனந்தம் என்றே கொட்டு முரசே...

### ஒற்றுமை

ஒன்று பரம்பொருள் எங்கும்—அதை
ஓமென ஓதிடும் வேதம்....
நின்று நிலக்கும் அதனை—நம்
நெஞ்சில் உணர்வது ஞானம். (ஒற்)

பொங்கும் உயிர்க்குயி ரான—சுத்த
போத ஸ்வரூபம் அதுநாம்
எங்கும் அதன்மய மென்றால்—இனி
ஏதுக்குச் சாதிப் புகைச்சல்? (ஒற்)

வான விரிவினைப் போலே—எங்கும்
வாவிடும் காற்றினைப் போலே,
ஞான விரிவது வாகும்—விரி
ஞாயி றதன்சுட ராகும்.... (ஒற்)

உலகமெல் லாமதன் கோயில்—உயிர்
உள்ளமெல் லாம்சந்நி தானம்.
பலபல தோற்றங்க ளெல்லாம்—அதன்
பன்மைகள் என்று பகர்வோம்.... (ஓற்)

தானெனக் காண்பது ப்ரம்மம்--உள்ளே
தன்னறி வாவது ப்ரம்மம்.
போன தியானத்தி னாலே—அந்த
மூலப் பொருளை யுணர்வாம்.... (ஓற்)

ஆயிரம் சாமிகள் பேசி—பதி
னாயிரம் சாதிக ளாகி
தாயினும் அன்பு மிகுந்த—ஒரு
சத்திய வத்துவைக் காணார்.... (ஓற்)

நானெனும் ஆணவத் தாலே—சும்மா
நச்சுப்பே ராசைக ளாலே
ஈனப் பொறுமைக ளாலே—இங்கே
ஏற்ற மிழந்தனர் மாந்தர். (ஓற்)

தன்னல மாயத்தின் மோகம்—வெறும்
தற்கொலைக் குச்சம மாகும்,
அன்னிய மாய வலைகள்—நம்மை
ஆழ்ந்த நரகத்திற் றள்ளும். (ஓற்)

வம்பு வளர்த்திட வேண்டாம்—வந்த
வாழ்வைச்சூ தாடிட வேண்டாம்.
கொம்பை யிழந்த குருடன்—போலக்
கொள்கை யிழந்திட வேண்டாம். (ஓற்)

உண்மைப் பொருளை மறந்தே—பல
ஊமைக் கனவில் உழன்றே
கண்மூடிக் கைலாசம் போகும்—அந்தக்
காய வெறுப்புகள் வேண்டாம். (ஒற்)

கல்வியும் வீரத் திறனும்—வீட்டைக்
காக்கத் தகுந்த தொழிலும்
நல்ல வுடலும் மனமும்—பெற்று
ஞாலத்தில் தீரராய் வாழ்வோம்.... (ஒற்)

ஈகையும் அன்பும் அருளும்—நாவில்
இன்சொல்லும் வாய்மையும் போற்றி
மோக வெறிகளை மாற்றி—வாழ்வை
முத்திக்கு வித்தெனச் செய்வோம்.... (ஒற்)

உண்மை யறிவை வளர்ப்போம்—எங்கும்
உத்தமர் கூட்டம் வளர்ப்போம்.
நன்மைகள் யாவையும் செய்வோம்—இங்கே
நாட்டுவோம் திவ்விய வாழ்வை.... (ஒற்)

பூமியெல் லார்க்கும் பொதுவாம்—விளை
போகம்எல் லார்க்கும் பொதுவாம்
சாமிஎல் லார்க்கும் பொதுவாம்—ஆத்ம
தர்மமெல் லார்க்கும் பொதுவாம். (ஒற்)

வேத முழக்கங்கள் செய்வோம்—இன்ப
விண்ணர சோங்கிடப் பாரில்
ஆதி பராபரன் அன்பிற்—கூடி
யாவருந் தேவராய் வாழ்வோம். (ஒற்)

## ச. ஈசோபநிஷத் ஸாரம்

### ஒளி வணக்கம்

இவ்வுல கெல்லாம் இறைவநின் உறையுள்;
எங்கெங்கும் உயிர்க்குயிர் நீயே
எவ்வகைப் பொருளும் இறைவநின் பொருளே!
ஈந்ததுய்த் தருட்பணி புரிந்தே
வவ்விடா தொருவர் பொருளைமற் றொருவர்
வழங்கிநா ளாண்டுகள் வாழ்க!
திவ்விய வுண்மைப் பொன்முகங் காட்டித்
திருவருள் புரியருட் சுடரே! (க)

இருந்தவா றிருந்தே இயங்கிடும் பொருளே,
ஏகமே னகமாய் வளர்ந்தாய்!
அருந்துணை நீயே; அகந்தொறும் கனலும்
ஆத்துமத் தெய்வமே, உன்னைத்
திருந்துநல் லறிஞர் யாவுமாய்த் தெளிந்தே
திகைத்திடார்; பகைத்திடார்; அன்பே
பொருந்தி யெந்நாளும் சுதந்தர ராகப்
பொலிகுவர் பூரண வொளியே! (உ)

எப்பொரு ளறிந்தார் அறிந்தவ ராவர்,
எப்பொரு ளாளரின் புறுவார்,
எப்பொரு ளிரவு பகலென்ப தின்றி
இறப்பையும் பிறப்பையும் வென்றே
சிற்பர வொளியாய், அமரவாழ் வருளும்
தேன்விளை ஞானவூற் றமோ,
அப்பொரு ளுண்மை யறிவினுக் கென்னை
அக்கினிக் கடவுளே நடத்தாய்! (ஙு)

## ரு. கேனோபநிஷத் ஸாரம்

வெற்றி பெறுவது பிரஹ்மம். தாமே வென்றதாக ஒருகால் தேவர் செருக்குற்றனர்—இந்திரன், அக்னி, வாயு முதலியோர். இவர் செருக்கை அழிக்க பிரஹ்மம் ஒரு யக்ஷன் வடிவுகொண்டு முன் வந்தது. அந்த யக்ஷனுக்குத் தமது பராக்கிரமத்தைக் காட்ட முடிவுசெய்து தேவர் அக்னியை அனுப்பினர். "நீ யார்" என்றான் யக்ஷன். "நான் அக்னி. உலகில் உள்ளதையெல்லாம் எரித்துவிடுவேன்." "இதை எரி பார்ப்போம்!" என்று ஒரு துரும்பைப் போட்டான் யக்ஷன். அக்னியின் ஜம்பம் பலிக்கவில்லை. அடுத்தபடி வாயு வந்தான். "நான் எல்லாவற்றையும் ஊதியெறிவேன்," என்றான். "மெத்தச் சரி. இந்தத் துரும்பிடம் உன் திறமையைக் காட்டு!" என்றான் யக்ஷன். வாயுவின் திறமை துரும்பிடம் பலிக்கவில்லை. உடனே இந்திரன் வந்தான். அவனைக் கண்டதும் யக்ஷன் மறைந்தான். அக்கணமே பராசக்தியான உமாதேவி அவன்முன் தோன்றினாள்.

### இந்திரன்

தாயே, கௌரி, தணலும் பராசக்தி
தானவரைச் செயித்தநம் வானவர்
†தீயும் *காற்றும் திகைக்கத் துரும்பினால்
திறமை காட்டிய திண்டிறல் யக்ஷன்யார்?

---

† அக்னி * வாயு

## கேனோபநிஷத் ஸாரம்

### பராசக்தி,

வாய்மை கேள்! வரும் வெற்றி பிரமத்தின்
    வலிமையால் எனும் வாய்மைகண் டோனிவன்
மாயங்கொள் மமதை வலி வற்றிடும்;
    மாசிலா பிரம்ம ஞானமே சக்தியாம்.

உண்மையாகும் பிரமம் ஒன்றே எல்லாம்—
    ஒளி, அனல், வெளி, நீர், நிலம், ஆருயிர்.
வண்மை யாவும் அதுதரும் வண்மையாம்;
    வானுலகது தான்எனும் அன்பர்கள்
திண்மை யான வரங்களும், வெற்றியும்
    திவ்ய ஞானமும் பெற்றுத் திகழுவார்;
கண்கள் ஆயிரம் கொண்ட சதமக,
    காண்ப தெல்லாம் பிரமமென் றன்புசெய்!

எது மனத்தி லிருந்து நினைப்பதோ,
    எதுவுன் னுவில் இருந்து சுவைப்பதோ,
எதுவுன் கண்ணி லிருந்தெங்கும் காண்பதோ,
    எது வுயிராயுன் னுள்ளத் துயிர்ப்பதோ,
எது வில்லாமல் எவையுமிங் கில்லையோ,
    எது விரிந்திங்கு *முப்பொரு ளாவதோ,
எது வியற்கை யுடல்கொண் டுலாவுமோ
    அது பிரமமென் றேயறி இந்திரா!

---

* முப்பொருள்—உயிர் உலகு இறை

## ௬. அமரத்தன்மை அளிக்கும் ஆத்மா

வாஜஸ்ரவன் விஸ்வஜித் யாகம் செய்தான்; தொத்தல் மாடுகளைத் தானமீந்தான். அந்த யாக விதிப்படி எல்லா உடைமைகளையும் தானம் செய்து விட வேண்டும். வாஜஸ்ரவன் மகன் நசிகேதஸ் அறிவாளி. "அப்பா! என்னை யாருக்குத் தரப் போகிறீர்?" என்று மூன்று தரம் ஆவலாகக் கேட்டான். தகப்பன் முன்கோபக்காரன்: "உன்னை எமனுக்குத் தரப் போகிறேன்!" என்று சிடுசிடுத்தான். வாக்குப் பலித்தது. நசிகேதஸ் எமலோகம் சென்று எமன் வீட்டு வாசலில் மூன்றுநாள் காத்திருந்தான். வெளியே போன எமன் திரும்பி வந்து "ஆஹா! அதிதியாகிய உம்மை மூன்றுநாள் பட்டினியுடன் வாசலில் காக்கவைத்தேனே. மஹா பாபம்! அதற்குப் பரிகாரமாக மூன்று வரங்கள் பெற்றுக்கொள்ளுங்கள்!" என்றான்.

**நசிகேதஸ் :** நான் என் தந்தையிடம் திரும்பிப் போகவேண்டும்; அவர் என்னை அறிந்து அமைதியாக ஏற்க வேண்டும். இதுவே முதல் வரம்.

**எமன் :** தந்தேன்!

**நசிகேதஸ் :** பசிதாக மோகங்களின்றி வானோர் நித்தியானந்தமடைகின்றனர். அத்தகைய வானிற்கு வழிகாட்டும் கனல் எது?

**எமன் :** அதுவே இதயக்குகையில் இருக்கும் கனல். இக்கனலை அடைந்தவன் பிறப்பிறப்பில்லாப் பெரு வாழ்வடைவான்.

**நசிகேதஸ்:** சரி; மூன்றாவது வரம் கேட்கிறேன். இறந்தபின் 'ஆள் இருக்கிறான்' என்பர் சிலர். 'இல்லை' என்பர் சிலர். இருக்கும் பொருள் எது? அமரத்தன்மையின் இரகசியம் என்ன?

**எமன்:** அந்த வரம் தரத் தயங்கி ஆசை காட்டுகிறான் :—

### எமன்

பொன்னை யீவேன்; புவியர சீவேன்;
போகச் செல்வப் பொலிவெல்லாம் ஈவேன்;
இன்னிசை யணி மாதரை யீவேன்;
இறப்பின் மர்மம் இயம்பிட வொண்ணேன்....

### நசிகேதஸ்

புவி யளிக்கும்இப் போகங்கள் யாவும்,
புழுதி மண்ணிற் புரண்டுமண் ணாகும்;
எவையும் வேண்டேன்; எமதர்மனே, தா
இறப்பை வெல்லும் வரத்தினை இன்றே....!

### எமன்

மூடர் சிக்கி முழித்திடும் ஆசையை
முனிந்து வேண்டினை மூய்வறும் ஒன்றையே;

அது,

தேடரியது; செப்பவொண் ணாதது;
சிறிதிற் சின்னது; சீரிதிற் சீரிதாம்;

எட்டறியாப் பொருளிதை 'ஓம்' என்பார்
இதயத்தில் இதைக் கண்ட புலவரே,
சாட வல்லவர் சாவையு நோவையும்
சத்தியம்; நசிகேத நீ கேட்டியால்!

புலன்களினும் பெரிது மனம்; அதின்
புத்திசிரி ததனினும் ஆத்துமா
பல மடங்கு பெரிய பே ரின்பமாம்....
பார்த்த பின்னதைப் பார்ப்புவே றில்லையாம்;
உலகெலாம் அஃதொன் றேயென் றுணருவாய்;
உயிர் வெறுப்பும் பயமும்பின் இல்லையாம்.
இலகும் ஆத்தும சித்திக்கிந் நேரமே
எழு! முயற்சிசெய்! 'ஓ' மென் றியம்பியே!

## எ. சூரியோபதேசம்

### நான்

விண்மணிச் சுடரே—ஞான
விளக்கொளிச் சுடரே
கண்மணிச் சுடரே—என்
கவலை தீராயோ?
மண்ணுல கினிலே—ஒரு
மகிழ்வுங் காணவில்லை.
புண்படு கின்றேன்—எனக்கோர்
புகல் கொடுத் தருள்வாய்! க

வீடு பிடிக்கவில்லை—ஒரு
வேலை பிடிக்கவில்லை.
நாடு பிடிக்கவில்லை—மாந்தர்
நட்பும் புளித்த தப்பா!
காடும் பிடிக்கவில்லை—கவி
கற்றும் அமைதியில்லை.
ஓடு நதிக்கரையில்—ஏதோ
உன்மத்தங் கொண்டமர்ந்தேன்... உ

சொர்க்கமென் றுள்ளதெல்லாம்—ஒரு
சொற்பனம் போன்றதப்பா!
வந்துசென் றேயலையும்—இந்த
வாழ்வின் கருத்தறியேன்.
புந்திக் கொளிதருவாய்—இந்தப்
புவிக்கொளி தருவோய்....
எந்த வகையினிலே—இன்பம்
இயலு மென் றியம்பாய்.... ங

### சூரியன்

வானத்தின் மீதிருந்தே—மௌனமாய்
மண்ணுல காளுகின்றேன்—இந்த
ஞானத்தி லேநிலைத்தே—மனிதா
ஞாலத்தில் வாழ்ந்திடுவாய்!
ஊனக்கண் ணைக்குவிப்பாய்—மனிதா
உள்விழியைத் திறப்பாய்!
நானென்றுன் உள்ளுணரும்—அதுவே
நானுயிர்க் கணமாம். ச

மேக வுருவினைப்போல்—மாந்தர்
    மேனியுருக் குலையும்,
மோகவெங்கானலிலே—வாழ்க்கை
    முன்சென்று சென்றிளைத்தே,
தாகந் தணியாமல்—ஒரு
    சாந்தமும் காணுமல்
வேகந் தணியாமல்—வருந்துப்,
    விந்தையை நீ யறிவாய். ரு

எல்லை யில்லாத் தொழில்கள்—உலகில்
    என்கதிர் செய்வதைப்பார்!
சொல்லறு சாட்சியதாம்—என்
    சூட்சுமங் கண்டறிவாய்!
நல்லது வந்தாலும்—உலகில்
    நாணு விதமான
அல்லல்கள் வந்தாலும்—உன்னை
    ஆத்மாவென் றேயுணர்வாய்—பின்னர்
தொல்லை யுனக்கில்லை—என்றுந்
    தோல்வி யுனக்கில்லை. சா

வீரன்கை வாளெனவே—குயவன்கை
    மென்களி மண்ணெனவே
காரிடை நீரெனவே—ஆழக்
    கடலினில் முத்தெனவே,
தாரிடைப் பூவெனவே—ஆன்ம
    தத்துவத்திற் பொருந்திப்
பாரிடை வாழுவதே—மனிதா,
    பந்தமில்லாச் சுகமாம்! எ

## ௮. கண்ணன் குழல்

[வாழ்வாகிய யமுனை நதி ஓடுகிறது. அதன் கரையில் பரமாத்மா தனியே ஏகநாதனாக நின்று, பரநாதக் குழல் ஊதுகிறான். அதைக் கேட்டதும், அன்பு கனிந்த ஜீவகோபி ஆவேசங்கொண்டு, உலகையும் உறவையும் மறந்து, பரமாத்மாவிடம் ஓடிவருகிறாள்; தன் தோழியராகிய அந்தக்கரணங்கள், இந்திரியங்கள், தன்மாத்திரைகள் அனைத்தையும் கண்ணன் காதலில் உருகி யின்புற அழைக்கிறாள். பரமாத்மனை உள்ளே அணைந்து எல்லாம் அவனாகக் காணும் ஏகரஸானுபவத்திற்கு யோகத்தால் எழும் ஒங்காரமே அழைப்பாகும். அதுவே கண்ணன் குழலின் இரகசியம். குழலோசைகேட்டு, மற்றப் பிரவிருத்திகளை விட்டுவந்த ஜீவசமுதாயமான அன்பரை அந்தர்யாமியான கண்ணன் தன்னுள் அணைத்துக்கொண்டு ஐக்கியானந்த மளிக்கிறான். அதுவே ராசலீலையின் தத்துவம். இப்பொருளை முன் வைத்து அடியில்வரும் கோபிகளின் பாட்டை ஆராய்க!]

கண்ணன் அழைக்கிறான்.... கண்ணன் அழைக்கிறான்,
காதற் சகோதரிகாள்....!
கண்ணைக் கருத்தைக் கவர்ந்துள் ஒளிந்தநம்
கள்வன் அழைத்துவிட்டான்!
மண்ணிலும், வானிலும் மோகன நாத
வலையை விரித்து விட்டான்....
கண்ணிவைத் தாவியைக் கட்டிப் பிடித்தவன்
கைக்கிளி யாக்கி விட்டான்! (கண்)

குழல் அழைக்குது, குழல் அழைக்குது
கோவிந்தக் காதலர்காள்....!
மழலையும், யாழும், மருந்தும் புளித்தது
மாதவன் அன்பிசை முன்!
அழகன் அமுதனெம் ஆவியைக் கொள்ளைகொண்
டாடல் புரிவதற்கே,
வழி துலக்கினன் ; வாருங்கள் ப்ருந்தா
வனத்தினுக் கோடிடுவோம்! (கண்)

காட்டுக் குழலந்தக் கண்ண னுயிர்ப்பினுற்
கண்ணறு வேகத்திலே,
பாட்டுச் சுருளலை நீட்டியென் ஜீவப்
படகைக்கொண் டேகுதடீ!
எட்டுப் பொருளினுக் கெட்டாப் பொருளவன்
என்னுளந் தொட் டிழுத்தான்...
வீட்டுற வற்றது....நாட்டுற வற்றது....
வேணுசெய் மாயமடி! (கண்)
என்னைக் கொடுத்ததுந் தன்னைக் கொடுத்தனன்
என்னுயிர் தானுன்!
அன்னையும் அப்பனும் ஆசை மணாளனும்,
அன்பிளஞ் சேயுமவன்!
பொன்னிடைப் போகமும் பொய்த்த தவன்கனல்
பொங்கி யெழுந்ததுவும்
மின்னிடையீர், கண்ணன் புன்னகை யுண்டுநம்
வேட்கை தணிந் திடுவோம்.... (கண்)
மாதவ னில்லாத மானிட வாழ்க்கையோர்
மண்புழு வாழ்க்கை யன்ருே?
கோதவன் செய்தாலுங் கோபம் வராதொரு
கொண்டாட்ட மாகுதடீ!
சோதனை செய்யினும் வேதனை கொள்ளாது
சொன்னபடி நடப்போம்.
காதலைக் காணிக்கை யாகக் கொடுத்தவன்
காதலிலே கரைவோம்! (கண்)
வெள்ளியலை வீசி விம்மும் யமுனையின்
வெள்ளிடையில் இருப்பான்,
கள்ளிறைப் பூக்கள் கவின்செய் வனத்திலக்
கள்ளன் ஒளிந்திருப்பான்,
மெள்ளப்பின் வந்து விழியினை மூடி
விரைந்து மறைந்திடுவான்,
உள்ளங் குளிரநம் உள்ளத்தில் உள்ளமாய்
உள்ளுற ஒன்றிடுவாய். (கண்)

## ௯. சமவசரணம்

[பகவான் மஹாவீரர் சர்வஜன ஐக்கியத்திற்கு மட்டு மன்று, சர்வ ஜீவ ஐக்கியத்திற்கும் பணிசெய் தார். அவர் சமவசரணம் என்ற ஓர் அகண்ட தருமசங்கத்தை நிலைநாட்டினார். அதில் அஹிம்ஸா தர்மத்தை மேற்கொண்டவர்களெல்லாரும் சேர்ந்து அவர்தம் உபதேசங்களைக் கேட்டனர்.]

### பக்த கோடிகள்

அருகா சரணம், அமலா சரணம்,
முருகார் திருவே, முதல்வா சரணம்,
பெருமா தவனே, பெரியோய் சரணம்,
உருகும் அடியார்க் கொளியே சரணம்!
அமைதிக் கடலே, அறிவே, நிறைவே,
சமதைச் சுடரே, தருமக் கதிரே
விமலா சரணம், விஜயா சரணம்,
சமவச் சரணத் தரசே சரணம்!

### மஹாவீரர் உபதேசம்

ஆருயிர் உலகிற் கெல்லாம்
அன்புடன் அருளு மேவிக்
காருயர் வானம் போலக்
கருணையே கருதிச் செய்மின்!
பாருயர் இன்பம் வேண்டின்,
பற்றினை நீங்கி வாழ்மின்
சீருயர் அஹிம்ஸா தர்மச்
செல்வர்கள் சிறக்க நாளும்!

சுத்தமே தெய்வத் தன்மை;
சுத்தமே சோதி சக்தி;
சுத்தமே இன்ப வாழ்க்கை;
சுத்தமே ஞான சித்தி;
சுத்தமே உண்மைக் காட்சி;
சுத்தமே ஜீவன் முக்தி;
சுத்தசன் மார்க்கம் போற்றித்
தொல்புவி மாந்தர் வாழ்க!

பொய், கொலை, களவு, காமம்,
கட்குடி, பொறாமை யான
வெய்யதீ வழியை விட்டு,
விலகினேர் தூய ராவார்.
மெய் யருள் அமைதி, நேர்மை,
மேதகு பிரம சர்யம்
உய்வழி; யிதனைப் போற்றி
ஒற்றுமை யாக வாழ்வீர்!

பொல்வினை தவிர்த்துப் பாசப்
போர்வினை தவிர்த்துத் தீய
கொல்வினை தவிர்த்து நல்ல
குணங்களைப் பயின்று, சென்ம
வல்வினை தவிர்க்குந் தூய
மாதவம் புரிந்து, நாளும்
எல்லையில் முத்தி யின்பம்
எய்துக வுலக மெல்லாம்!

## கல. புத்தர் தியானம்

போதியே வீடு தாங்கப்
புற்றரை இருக்கை தாங்க
சீதவெண் ணிலவோ டாடும்
தென்றல்சே வடியைக் கொஞ்ச,
சோதிநிர் வாணந் தாங்கும்
சுத்தனும் புத்தன், இந்த
மேதினி யெல்லாம் அன்பு
மேவிடத் தியானம் செய்தான்.

எல்லா வுயிர்க்கும் இன்பமோங் குகவே!
கொல்லா நெறியே குலவுக வுலகில்!
ஞான மோங்குக! ஞானிக ளோங்குக!
தான மோங்குக, தவக்கன லோங்குக!
அறமோங்குகவே, அறவோர் ஓங்குக,
அறவோர் சங்கம் அருட்பொலி வெய்துக!
அனைவருள் ளத்திலும் அன்பே வளர்க,
தனைப்போ லெண்ணுக தான்பிற வுயிரை!
தூய்மை யுறுகவே சொன்மனஞ் செயலில்.
வாய்மை வளர்கவே வாய்நடை நினைப்பில்.
கருணை பொங்குக தருணமா மழைபோல்.
இருவிகற் பொழிகவே இரவிமுன் பனிபோல்.
ஆசை, பொறுமை, ஆணவ மொழிக!
பாசம் விலகுக, பந்த மறுகவே!
நேச மோங்கி நிலமெலாம் வாழ்க!
தேச மெல்லாம் சிலவாழ் வோங்குக!
இருப்பு விலங்கினும் இன்னு செய்யும்
விருப்பு வெறுப்பாம் வேட்கை யொழிக!
பற்றின் வருவதே பலபல துன்பம்
பற்றற் றவரே பரமா னந்தராம்.

பொறிகளின் வழியே புத்திவிட் டலைவார்,
அறிவினை யிழப்பார் அல்லற் படுவார்.
காமக் காட்டிற் கட்டற் றலைவார்
ஈமக் காட்டிற் கேகுவர் விரைந்தே.
பிறப்பினால் வளரும் பெருகிய துன்பம்,
துறப்பி னாலே துகளற நீங்கும்.
காமம் வெகுளி கட்கள வின்றி,
நாமெனுஞ் செருக்கினை நலித்துப் பணிவுடன்,
அமுதினும் இன்சொல் அடக்கமாய் வழங்கி,
சமதம முடனே சாந்தம் பேணி,
அந்தக் கரணம் அடங்கலும் வென்றோர்
தொந்த மில்லாச் சுகவழி காண்பார்.

இன்னுடல் வாழ்க்கை மின்னென மறையும்.
தன்னுடன் இருவினைத் தளையே தொடரும்.
தானமும் சீலமும் தயையும், தியானமும்
ஞானமுந் தவமும் மோனமும் போற்றுக.

புத்தர் வாழ்க, பொலிக தருமம்!
புத்த சங்கம் புனிதமாய் வாழ்கவே!

## ௧௧. கிறிஸ்து வுள்ளம்

உன்னதே யிவ்வுடல். உன்னதே யிவ்வுயிர்.
உன்னதே யென்னுளம். உன்செயல் யாவுமே.
உன்னதே வான், புவி. உன்னதே வாழ்வெலாம்.
என்னருந் தந்தையுன் இச்சையே யாகுக!

* * *

அன்பே வடிவாம் இன்பப் பொருளே,
உன்பரஞ் சோதி யுலகெலாம் பொலிக!
உன்னருளோங்குக, வுன்னிசை வாழ்க!
உன்னர சாட்சி யுலகெலாம் பரவுக!
தேவனே யுனது திருவுள மாகுக!
ஒவ்வொரு நாளும் ஊட்டி வளர்ப்பாய்,
வெவ்வழி நீக்கிச் செவ்வழி சேர்ப்பாய்.
பொறையுட னொழுகுந் திறனெமக் கருளாய்.
ஏழைக் கிரங்கும் எம்பிரான் போற்றி!
வாழியுன் கருணை வையக மெல்லாம்.
வாழி யெளியவர் வானர சாள்வார்.
வாழி யிரங்குவோர், வருத்தந் தணிவார்.
வாழி சாதுக்கள் வையம் புரப்பார்.
வாழி யறவோர் மனக்களிப் படைவார்.
வாழி வருந்துவோர் வானர சவர்க்கே
தூயர் வாழ்க, சுத்தனைக் காண்பார்.
நேயர் வாழ்க நிம்மதி யடைவார்.
அமைதி யாக்குவோர் ஆண்டவன் சேய்கள்
தமைப்போற் பிறரைச் சகிப்பவர் வாழ்க!
பகைக்கும் அன்பே பரிந்து செய்க.

நகைக்கும் வசைக்கும் நயவுரை சொல்க!
கோளும் வஞ்சக் கொடுமையும் துயரும்
வாளும் வருத்தினு மனங்கலங் காதீர்!
புன்னகை யுடனே புண்ணைப் பொறுமின்!
இன்னலை இனிமையே யினிதுற வெல்லும்.
எப்படி மற்ருேர் இருக்க விரும்புவீர்
அப்படிப் பிறரிடம் அன்பா யிருமின்!
அழியா வுண்மை ஆன்மா வாகும்.
அழியாச் செல்வம் அருளே யாகும்.
ஆன்மா விற்கிணை அகிலமும் இல்லை.
தானது வென்னுந் தன்மையா லுய்வீர்.
வானர சுள்ளே வளருவ தறிவீர்;
வானர சடைவீர்; வரும்பின் அனைத்தும்.
பூரணன் போலப் பூரண ராவீர்;
பூரணத் தந்தையின் புதல்வர் நீரே!
பாரின்ப வேட்கை படரென விலக்கிப்
பேரின்ப வேட்கை பெரிதும் வளர்மின்!
இருள்வழி நீங்கி யருள்வழி சேர்மின்!
கருணைத் தந்தை காப்பான் என்றே,
அஞ்சா திருமின் அறவழி நடந்தே.
நெஞ்சினில் அன்பே நிரம்ப வளர்மின்.
குருவிக் குணவும் குமுதிற் கணியும்
தந்திடுந் தந்தை தருவான் உமக்கும்.
உம்மா லாவ தொன்றுமே யில்லை.
தம்மா லாவன தந்தை செயல்களே.
திருத்துமின் உம்மையே; தெவ்வரை வாழ்த்துமின்!

வருத்துவோர் தமையும் வெறுத்த லொழிமின்!
உற்றவர் போலே மற்றவர்க் குதவுமின்!
அற்றவர்க் குதவுமின் அகந்தை யின்றி.
ஒன்னலர் தம்மையு மன்னித் தொழுகுமின்;
தன்னலந் தவிர்மின்; சத்தியங் காமின்!
ஓதிச் சுருக்கமாய் உண்டிலை யென்றே,
யாதின் மீதும் ஆணை யிடேன்மின்.
மலைக்குடில் போலும், வயல்விதை போலும்,
அலைவற வூன்றுமின் ஆண்டவன் அருளில்!
கருத்திலும் ஒழிமின் காமத் தினவை!
கருத்து வேட்டலும் கலவைய தாகும்.
இடக்கை காணாது வலக்கை தருகவே
அடக்கமாய்த் தருவதை ஆண்டவன் அறிவான்.
அவனடி பற்றி அனைவரும் வாழ்கவே!
சவலைச் சேயெனத் தந்தையை நாடுமின்
கவலை தீரும், கட்டுகள் விலகும்.
தேடுக கிடைக்கும். தட்டுக திறக்கும்.
கூடுக சுவைக்கும், குணநிதி யருளே!

* * *

ஆண்டவன் அருளை நம்பி, அகந்தையைச் சிலுவை
[யிட்டு,
நீண்டெழுந் துயர்க் குலத்தை நிம்மதி யாலே
[வென்று,
மூண்டெழு மன்பி னாலே முத்தியி னின்ப வாழ்வைப்
பூண்டெழி லோங்கி நாளும் பூரண ராக வாழ்வீர்!

ஆமன்.

## ௧௨. தீன் இஸ்லாம்

ஆண்டவன் ஒருவன். அவனே பரம் பொருள்.
ஈண்டவ னுக்கிணை யெதுவுமே யில்லை.
அவனையே தொழுமின் அல்லும் பகலும்.
அவனைக் கலத்தலே ஆத்மா னந்தமாம்.
முதல்வனை யெண்ணி, முழுதுந் தெளிந்த
இதய சாந்தமே இஸ்லா மாகும்.
எனதியான் என்னும் இருமாப் பொழிந்து,
மனதி லிறைவனை மறுவற நினைமின்!
குலைவற நம்புமின் குன்றும் இணங்கும்.
மலைவறப் பணிமின் மஹாதே வனையே.
காற்றும் கடலும் கதிரும் மழையும்
ஊற்றும் பயிரும். உயிரும் உலகும்
அவனருள் விரிவே யாவையு மாகும்.
அவனை மறத்தலே அனைத்தினுந் தீதாம்.
அகந்தை காமம், அச்சம், பொறாமை,
சுகந்தனைத் தேய்க்கும் துயர்க்குல மாகும்.
குடியும் களவும், கொலையும், விடுவீர்!
அடிமையென் றெவரையும் கொடுமைசெய் யாதீர்!
நன்மை விதைக்க நன்மை விளையும்
தீமை விதைக்கத் தீமையே விளையும்.

தீயன வற்றை நோயென நீக்கித்
தூயன வற்றைத் துணையெனக் கொள்வீர்!
எளிமையும், பொறுமையும், ஈகையும் விரதமும்,
உளமிகு தூய்மையும், உண்மையும் அன்பும்

பசிக்கொரு தொழிலும் பண்புறப் போற்றுமின்.
புசிப்பிலுஞ் செயலிலும் புனிதம் பேணுமின்.
ஆண்பெண் இருவரும் அறிவை வளர்மின்.
மாண்புறு கல்வியே மாந்தர் விழியாம்.
இல்லற மாகிய நல்லறம் போற்றி
அல்லா வுக்கே ஆளாய் வாழ்வீர்.
இன்னுரை பேசி எவர்க்கும் சலாமெனும்
பொன்னுரை பேசுமின்; பொய்யுரை தவிர்மின்.
ஐம்பொறி களையும் அடக்கி யொழுகுமின்
ஐம்பூத வுடலை அழுக்கறக் காமின்.
பிரானை வணங்கிப் பேயைத் துரத்துமின்.
குரானைப் பயின்று குணமுட னிருமின்.
அல்லா பெரியோன் அவனையே தொழுமின்
எல்லாங் கூடும்; இன்பம் பெருகுமே!

* * *

அருளோங்கு முயற்சியினில் அயரா தீர்கள்
அருவனும் ஆண்டவனை மறவா தீர்கள்.
இருளோங்கும் ஷைத்தானுக் கிணங்கா தீர்கள்.
இடரோங்கு மாயவழி யேகா தீர்கள்.
திருவோங்கு நன்முயற்சி வழுவா தீர்கள்.
சித்தத்தை அலையவிட்டுச் சிதையா தீர்கள்.
தெருளோங்கு மறிவொளியைத் தேடு வீரே...
தீனிஸ்லாம் பயனிதுவே நாடு வீரே!

## கரு. கிரந்த ஸாஹிப்

ஏகனே கடவுள்.... ஈகையும் அன்பும்,
ஆகும் அவனை அடைந்திடும் வழியே.
அன்பைப் பெற்ருர் அனைத்தையும் பெற்ருர்.
அன்பை யிழந்தார் அனைத்து மிழந்தார்.
தாமதப் புத்தியைத் தள்ளி யொதுக்குமின்.
நாம ஜபத்தை நாளுமே செய்மின்.
நேயம் வளர நினைத்து வணங்குந்
தூயர் உளத்திற் சுத்தன் இருப்பான்.
காமமுஞ் சினமும் கவலையே யாக்கும்.
சேம மருளும் சித்தவை ராக்கியம்.
சாதி பேதச் சடங்குகள் வேண்டா.
பேத புத்தி பேயினுந் தீதாம்.
நெஞ்சக் கடவுளை நினைத்திடு நிமலர்,
அஞ்சார், கலங்கார், அபஜய மடையார்.
சாது சங்கமும், சத்திய வாக்கும்,
தீது தீர்க்கும்; சேம மளிக்கும்.
குருவைப் பணிவீர் குருமொழி போற்றுவீர்
குருவரு ளாலே திருமிகச் செழிப்பீர்.
நித்தியன் அருள்வான் முத்தியும் சித்தியும்
ஸத்ஸ்ரீ அகால்எனச் சந்ததம் இசைப்பீர்!

## ௧௪. சுத்த சன்மார்க்கம்

சுத்தசன் மார்க்கத்தைக் கேளீர்—இந்தத்
தொல்புவிக் கோயிலில் வாழ்வீர்.
சத்துசித் தானந்த மாகும்—ஒரு
சாந்தச் சுடரே கடவுள்! ௧

சாதிமத விவ காரம்—மனச்
சங்கையின் கூச்சலே யாகும்.
ஆதிப் பரம்பொருள் ஒன்றே—அதன்
அன்பினால் ஓங்கிடும் இன்பம். ௨

கூட்டுக் கிளியினைப் போலே—பூதக்
கூட்டில் வளரும்சுத் தான்மா!
நாட்டி மனதை யதிலே—அது
நானெனு ஞானத்தில் வாழ்வீர்! ௩

ஏறுங் குகைக்கன லாலே—யோக
மெய்திய சுத்த ஹ்ருதயர்,
வீறுகொள் ஆத்தும தீரர்—செயல்
வெற்றி யவர்க்கியல் பாகும். ௪

மலையிற் பிறக்கும் அருவி—இந்த
மண்வள மைபெறப் பாய்ந்தே
அலையிற் கலப்பதைப் போலே—உயி
ராற்றி னியக்கமு மாகும். ௫

இன்றிருப்போர் நாளை யில்லை—என்றே
ஏங்கித் தளர்ந்திட லேனோ?
நன்றிந்த வாழ்வுப் பொழிலைக்—கனி
நல்கிடப் போற்றி வளர்ப்போம்! ௬

அல்லியும் தாமரை யும்போல்—இங்கே
ஆகும் இருவிகற் பங்கள்.
நல்ல சமபுத்தி யாலே—எந்
நாளும் வசையற வாழ்வோம். எ

ஆக்கம் அழிவியல் பாகும்—இங்கே
அல்லும் பகலு மெனவே....
பூக்கும் புதுமலர் போலே—நாம்
புன்னகை கொண்டு பொலிவாம். அ

கூற்றெதிர் நிற்கினும் அஞ்சோம்—கொண்ட
கொள்கையைப் போற்றா தஞ்சோம்.
ஆற்றலை மிக்க வளர்ப்போம்—புவி
ஆளும் அறிவை வளர்ப்போம். கூ

வாழும் வகையினைக் கேளீர்—இங்கே
வந்திருந் தேகிதஞ் செல்வீர்!
சூழும் உயிர்க்குல மெல்லாம்—உங்கள்
சொந்த வுயிரெனக் கொள்வீர்! கய

வல்லான் வகுத்த வழியே—இந்த
வானமும் வையமும் செல்லும்.
எல்லா மவன்மய மாகும்—உயி
ரெல்லாம் அவனுட லாகும்; கக

அன்பெனக் காண்போ மவனை—உள்
ளன்பினாற் பூசனை செய்வோம்
என்பது சுத்தசன் மார்க்கம்—இதை
எல்லாரும் போற்றி மகிழ்வாம். கஉ

சுவாமி சுத்தானந்த பாரதியார் பாடிய
சமயசாரம் முற்றிற்று.

